# தமிழகம்

சிறப்பு ஆசிரியர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார்

மலர் 5] சோபகிருது பங்குனி 17, 30—3—64 கிழமை இதழ். விலை – 10 காசுகள். [இதழ் 16-17



அப்பர் தரும் விருந்து

## அன்பின்றித் தீர்த்தமாடுதல்

———

பல்வேறு தீர்த்தங்கள் ஆடினாலும், பல்வேறு தீர்த்தங்களையும் கலந்து குளித்தாலும் இறைவனிடத்துத் தூய மெய்யன்பு—மனநெகிழ்ச்சி இல்லையேல் என்ன பயன்? இவ்வாறு உயிர்நாடியாக விளங்குகிற இறைவனிடத்தே மெய்யன்பின்றித் தீர்த்தமாடும் செயல்எத்தகையது தெரியுமா? இதனை அழகான உவமையொன்றின் மூலம் தெளிவாகக் கூறுகிறார் அப்பரடிகள். இயல்பாகவே ஓடுகிற தன்மையுடைய நீரினை ஓட்டைக் குடத்திலே பிடித்து அடைத்துவைக்க முடியுமா? அவ்வாறு அடைத்து வைக்க முயற்சிப்பது எவ்வளவு அறிவீனமானது! இறைவனிடத்து மெய்யன்பின்றித் தீர்த்தங்கள் ஆடிப் பயன்பெற நினைப்பது—நன்மைபெற எண்ணுவது அந்தப் பேதையின் செயலோடுதான் ஒக்கும்!

அப்பரடிகள் இதனைக் கூறுகிறார் பாருங்கள்:

"கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னாலும் அரனுக்கன் பிலையேல்
ஓடு நீரினை ஓட்டைக் குடத்தட்டி
மூடிவைத் திட்ட மூர்க்கனோ டொக்கும்.

# உடலுறுப்புகளால் மட்டும் மனிதனாக முடியாது உயர் ஒழுக்கத்தால்தான் மனிதனாக முடியும்

டால்மியாபுரம் காந்தி மன்றத்தின் முதலாவது சிறப்புக் கூட்டம் 13-3-64ல் டால்மியாபுரம் உயர்நிலைப்பள்ளி மைதானத்தில் நடைபெற்றது. தொடக்கத்தில் டால்மியாபுரம் அம்பர் ராட்டைப் பயிற்சி நிலையப் பெண்கள் காந்திஜியின் சர்வமதப் பிரார்த்தனைப் பாடல்களை அழகாகப் பாடினர். திரு. அ. பழநிவேல் அனைவரையும் வரவேற்றார். டால்மியாபுரம் மண்டலக் காங்கிரஸ் கமிட்டியின் சார்பிலும், பாட்டாளி மன்றத்தின் சார்பிலும் தவத்திரு அடிகளார் அவர்களுக்கு மாலைகள் அணிவிக்கப் பெற்றன.

''வயிற்றுக்குச் சோறு கிடைக்காமல் — எண்ணிய வண்ணம் இனிதே வாழ உரிமையில்லாமல் இந்தநாட்டு மக்கள் அந்நியர்க்கு அடிமையாக வாழ்ந்தார்கள். நமது தேசப்பிதா காந்தியடிகள் இந்த நாட்டு மக்களுக்கு விடுதலை பெற்றுத்தந்தார். கூனிக்குறுகி வாழ்ந்த பாரத மக்களைத் தலைநிமிர்ந்து நடக்கச் செய்தார்''

—என்று தவத்திரு அடிகளார் அவர்கள் தமது சிறப்புரையில் குறிப்பிட்டார்கள். மேலும் அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது;

'மூக்கு, விழி, தலை, கை, கால் போன்ற உறுப்புக்களைப் பெற்றிருத்தலால் மட்டும் மனிதனாகி விடமுடியாது. அவற்றால் மனிதனுக்குப் பெருமையில்லை. எண்ணத்தால் — குணத்தால் — இனிய பண்பால் - பிறரை வாழ்வித்து வாழ்தலால் — பிறரை மகிழ்வித்து மகிழ்தலால்தான் மனிதனுக்குப் பெருமை' வயிரமுடைய — உறுதி படைத்த நெஞ்சால்தான் மனிதனுக்குப் பெருமை.

## சிந்தனை வேண்டும்

விலங்குக்கும் மனிதனுக்கும் வேறுபாடு இருக்க வேண்டாமா? தின்னுவதில் யானை மனிதனை வென்று விட்டது. ஊர்சுற்றுவதில் காக்கையும் நாயும் மனிதனை வென்று விட்டன; இனப்பெருக்கம் செய்வதில் பன்றி மனிதனை வென்று விட்டது. எனவே, எந்த வகையில் மனிதன் உயர்ந்தவன்? சிந்தனையால்தான் மனிதன் சிறந்தவனாக வாழமுடியும். அந்தச் சிந்தனை சக்திக்குத் தடைவிதிக்கலாமா?

—அடிகளார்

''மனித சமுதாயத்தில் பலர் தங்களுக்காகவே வாழுகிறார்கள். மற்றவர்களைப் பற்றி அவர்கள் அக்கறை கொள்வதில்லை. பொதுவாக, மரங்கள் விலங்குகள் ஆகியவற்றிடமுள்ள பண்பு கூட மனிதரிடமில்லை, தென்னை மரம் நீரையும், உரத்தையும் உணவாக்கிக் கொண்டு வளர்கிறது. பாளைவிடுகிறது-காய்க்கிறது. தான் உண்ட உணவில் தனக்குத் தேவையானது போக எஞ்சியதை தேங்காயாக நமக்குத் தந்து தவுகிறது! பசுவை எடுத்துக் கொள்ளுங்கள். தான் தின்னுகிற தீனியை இரத்தமாக மாற்றித் தனக்குத் தேவையானதுபோக எஞ்சியதைப் பாலாகமாற்றி நமக்குத் தருகிறது. இத்தகைய உதவும் பண்பு—சமுதாய ஒழுக்கம் நமக்கு வேண்டும்'' என்றார்கள்.

இறுதியாக, எண்ணங்கள், சிந்தனைகள், பழக்க வழக்கங்கள் இவையே இரத்தத்திற்குக் குணம் கொடுக்கின்றன. எனவே, நாம் நல்லனவே எண்ண வேண்டும் — நல்லனவே சிந்திக்கவேண்டும் — நல்ல பழக்க வழக்கங்களையே மேற்கொள்ள வேண்டும் என்று கூறிமுடித்தார்கள்.

திரு. பழநிவேல் நன்றி கூறினார்.

## வாழ்வித்து வாழ்ந்தால்-மகிழ்வித்து மகிழ்ந்தால் மனிதனின் பெருமை வளரும்; உயரும்!

# அவசர உணர்ச்சிகளுக்கு ஆட்படாமல் ஆழ்ந்து சிந்தனை செய்யவேண்டும்

[திருச்சி அருள்நெறித் திருக்கூட்டத்தின் சார்பில் நடைபெற்ற "ஏழில் இருபது" என்ற முதல் தொடர்ச் சொற்பொழிவின் முன் தொடர்ச்சி]

அப்பரடிகளுக்கு உலகில் எப்பொருளும் இல்லை. இறைவன் கொடுத்தார் இப்போது பெரும்பொருள் குவித்து வைத்திருப்பவர்கள், குவித்துள்ள பொருளை என்ன செய்யலாம் என்று தெரியாமல் திண்டாடுகிறார்கள். அப்படியிருக்க இறைவன் கொடுக்க வேண்டிய அவசியம் என்ன? இன்று சமயத்தின் பேரால், ஆண்டவனின் பேரால் குவிந்திருக்கும் பணத்தைப் பயன்படுத்திப் பணம் இல்லை என்ற நிலை ஏற்பட்டால் இறைவன் கொடுக்கத்தான் செய்வார். இன்றைக்கும் நாம் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி அழுதரற்றி இறைவனைக் கூப்பிட்டால் அவர் ஏன் என்று கேட்கத்தான் செய்வார் - இறங்கி வந்து கருணை புரியத்தான் செய்வார் - தேவை ஏற்படும்போது உதவத்தான் செய்வார். இந்த உண்மைகளை அப்பரடிகள் பாடல்களிற் காண்கிறோம். பெரும் பொருளாதாரப் புரட்சியை விரும்பிய கார்ல் மார்க்ஸ் போன்றவர்கள்கூட, 'பொருளைச் சேர்த்து வைத்திருப்பவன் கொடுக்கின்றானா இல்லையா? இல்லையென்றால் அடித்துப் பிடுங்கு 'என்றுதான் கூறினார். அவ்வாறு அடித்துப் பிடுங்கினாலும், பிடுங்கின நேரத்தில்தான் வலியும் தொல்லையும் இருக்கும். ஆனால், 'நீ கொடுத்து வாழாவிட்டால் இறைவன் உனக்கு நரகம் வைத்திருக்கிறார் - அந்த நரகத்திற்குப் போய் நீ காலமெல்லாம் அவதிப்படாமல் இருக்கவேண்டுமானால் உன்னிடம் உள்ளதை ஒளிக்காமல் கொடு' என்கிறார் அப்பரடிகள். இந்தப் பொருளாதார சமவாய்ப்புச் சமுதாய நோக்கோடு - பொதுமை நோக்கோடு பேசுகின்றார் அப்பரடிகள்.

'மாசில் வீணையும்
  மாலை மதியமும்
வீசு தென்றலும்
  வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை
  பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை
  இணையடி நீழலே!'

என்பது அப்பர் வாக்கு,

ஆம். அவ்வளவும் பொதுமை. யாராவது சுவர் எழுப்ப முடியுமா? வேலிபோட முடியுமா? மாசில்லாத வீணையின் ஒலியை ஏழையும் கேட்டு அனுபவிக்கலாம் - செல்வனும் கேட்டு அனுபவிக்கலாம், செவிகள் மட்டும் செவிடாக இல்லாமல் இருந்தால், மாலைக்கால மதியத்தின் அழகு - தண்ணொளி இன்பம் கோடீஸ்வரனுக்கும், குடிசையில் வாழ்வோனுக்கும் பொது மனக்குறை இல்லாதார் அனைவருக்கும் மாலை மதியம் இனிக்கும் - இன்பம் செய்யும். அதுபோலவே இறைவனின் தண்ணருளும் எல்லாருக்கும் பொது. அதை அனுபவிக்க மொழி வேறுபாடு கிடையாது - இனவேறுபாடு கிடையாது - மதவேறுபாடு கிடையாது - பொருளாதார வேறுபாடு கிடையாது. உள்ளம் மட்டும் கல்லாக - இரும்பாக இல்லாமலிருக்க வேண்டும்.

இறைவனுடைய திருவடிகளும், இறைவனின் ஆக்கத்தினால் ஏற்பட்ட உலகியல் பொருள்களும் இங்கு வாழும் மக்கள் அனைவர்க்கும் பொதுவானவை. அவற்றை மக்கள் அனைவரும் கூடி அனுபவித்துப் பயன்பெற வேண்டும் என்ற சிறந்த தத்துவத்தை - சித்தாந்தத்தை 'நாம் மாசில் வீணையும்' என்ற அப்பரடிகளின் பாடல் வாயிலாக அறிகிறோம்.

இன்று மொழி ஒருமைப்பாடு, இன ஒருமைப்பாடு என்றெல்லாம் பேசப்பெறுகிறது. இன்று மொழிச் சிக்கல் நமது நாட்டில் உச்சம் பெற்றிருக்கிறது. எனவே, நாம் யாரும் ஆத்திர - அவசர உணர்ச்சிகளுக்கு ஆட்படாமல் அமைதியாக ஆழ்ந்து சிந்தனை செய்து பார்க்க வேண்டும். மனிதனுக்கு வாய் இருக்கிற

# தாய்மொழிப் பற்றும் பிறமொழியுணர்வும் ஒருவனை உலக மனிதனாக ஆக்குகின்றன

# மண்ணோடும் விண்ணோடும் உறவு இருந்தால்தான் மரம் செழித்து வளர்ந்து பயன் தரும்

தென்றால் அது, தன்னோடு - தன் அண்ணன் தம்பிகளாக வாழுகின்றவர்களோடு மட்டும் பேசிக்கொண்டிருக்க அல்ல. நம் வீட்டிற்குள் இருக்கும் காற்றை மட்டும் அனுபவிக்க வேண்டும் என்பதற்காகவா நமது வீடுகளில் சன்னல் வைக்கிறோம்? வீட்டில் இருக்கும் ஆரோக்கியக் குறைவான காற்றும் வெளியே செல்லவும், வெளியில் இருக்கும் ஆரோக்கியமான காற்று உள்ளே வரவும் தானே சன்னல்? இந்தக் காற்றுப் போக்குவரத்தினால் ஆரோக்கியமான வாழ்வு அமைவதைப்போல ஒரு மனிதனுடைய தாய்மொழிப் பற்றும் பிறமொழி உறவும் சேர்ந்து மனிதனின் உள்ளத்தை வளர்க்கிறது. அவனை உலக மனிதனாக்குகிறது.

மரம் நன்றாக வளர்ந்து பூத்துக் காய்த்துப் பயன்தர வேண்டுமானால் மரத்திற்கும் மண்ணுக்கும் நல்ல உறவு இருக்க வேண்டும். மண்ணோடு மரத்திற்கு இருக்கிற தொடர்புதான் அந்த மரத்தைக் காக்கும் - வளர்க்கும். எனினும், அது மட்டும் போதாது, அந்த மரத்திற்கு விண்ணோடும் தொடர்பு வேண்டும். காற்று வேண்டும் - கதிரொளி வேண்டும். ஆம். மண்ணிலிருந்து மட்டுமல்ல - வேறுபல சூழல்களிலிருந்தும் அதற்கு உணவு தேவைப்படுகிறது.

இவ்வாறு, மண்ணோடும் விண்ணோடும் அந்த மரத்திற்கு உறவு இருந்தால்தான் - அது வளர்ந்து வாழ்ந்து பசுமையாகச் செழித்துப் பூத்துக் காய்த்துப் பெரும்பயன் தர முடியும். அதுபோலவே, மனித இனம் விரிந்து பரந்து வாழ வேண்டுமானால் - உலகத் தொடர்புகொண்டு உயர வேண்டுமானால், அவன் சிந்தனையால் செழுமையுற வேண்டுமானால் அவனுக்கும் தாய்மொழிப் பயிற்சியோடு பிறமொழி அறிவும் தேவை. இந்த இருபதாம் நூற்றாண்டுக் கருத்தை அப்பரடிகள் ஏழாம் நூற்றாண்டிலேயே நன்றாகப் புரிந்துகொண்டு பாடியிருக்கிறார்.

'வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன் காண்'

என்று குறிப்பிடுகின்றார். அந்த ஏழாம் நூற்றாண்டில் ஆங்கிலம் இல்லை - ஆங்கிலத்தைப் பற்றிய பிரச்னை இல்லை. எனவே, அவர் ஆங்கிலத்தைப் பற்றிப் பேசவும் இல்லை. ஆங்கிலம் இடைக்காலத்தேதான் வந்தது. இடைக்காலத்திலேயே போகவும் போகிறது. அதைக் கட்டி அழுவதாலே நமக்கும் பெரும்பயன் எதுவும் ஏற்படப் போவதில்லை. காரணம், ஆங்கிலத்தில் சிலரே பயிற்சி பெற்றிருக்கிறார்கள்.

பாரதத்தில் ஏறத்தாழ பத்து விழுக்காட்டினரே ஆங்கிலத்தில் பயிற்சி பெற்றிருப்பார்கள். அன்று - அந்த நூற்றாண்டில் நமது பாரத நாட்டை—இந்திய நாட்டை இணைத்த மொழிப் பாலங்கள் வடமொழியும், தமிழ்மொழியுமேயாம். வடக்கே வாழ்ந்தவர்கள் அனைவரும் தமிழைப் பயில ஆரம்பித்தார்கள் தெற்கே இருந்தவர்கள் அனைவரும் வடமொழியைப் பயில ஆரம்பித்தார்கள். மொழி உறவு மொழிப்பாலம் அமைந்தது - கருத்துவழி உறவு அமைந்தது. இதனையே இந்த மொழி ஒருமைப்பாட்டையே, வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனான்" என்று குறிப்பிட்டார் நமது அப்பரடிகள். 'ஆரியமோடு தென் தமிழ்' என்றார். இவ்விருமொழிகளுக்குள்ளும் உறவு வளர வேண்டும் - கருத்துப்பரிமாற்றம் வேண்டும் என்ற கருத்தைப் பார்க்கிறோம். இது மொழி ஒருமைப்பாடு.

அடுத்து, மனிதகுல ஒருமைப்பாடு பற்றியும் அப்பரடிகள் குறிப்பிட்டிருக்கிறார். இன்று - அணுகுண்டு யுகத்திலே அச்சத்தின் அடிப்படையிலே உலக ஒருமைப்பாடு பற்றிப் பேசுகிறோம். அன்று அப்பரடிகள் மனிதகுல ஒருமைப்பாட்டை வலியுறுத்தினார் என்றால் தலையிலேகுண்டு விழும் என்ற அச்சத்தின் அடிப்படையிலே அல்ல. 'நீதியின் அடிப்படையிலே நியா

## தாய்மொழியோடு பிறமொழிகளையும் பயின்றால்தான் மனிதன் சிந்தனையால் செழித்து வாழமுடியும்

# உணர்ச்சியைத் தொடுவதாக நமது பக்தி இயக்கம் மாறினால் உயர்ந்த ஒருமைப்பாடு மலரும்

யத்தின் அடிப்படையிலே - இலட்சியத்தின் அடிப்படையிலேதான் அவர் மனித குல ஒருமைப்பாட்டை வலியுறுத்தினார். 'எல்லா உலகமும் ஆனாய் நீயே' என்கிறார். எல்லா உலகத்திலும், உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் ஒருமைப்பாடு நின்று நிலவ வேண்டும் என்கிறார். இன்று, விரிந்த சிந்தனையுடையன்— பரந்த கருத்துடையன் ஒருமைப்பாட்டை நினைத்துப் பார்க்கிறான். விரிந்து பரந்த உலகத்தோடு உறவு கொள்ளக்கை நீட்டுகிறான்.

அப்பரடிகள் காலத்தில் - உலகத்தோடு உறவு கொள்ள நல்ல வசதிகள் இல்லாதிருந்த காலத்தில் 'எல்லா உலகமும் ஆனாய் நீயே!' என்று பாடினார், அப்பரடிகள். உலகத்திற்கெல்லாம் இறைவன் ஒருவனாய் நிற்கின்றான் என்ற சிந்தாந்தப்படி இங்கு நாம் உலக ஒருமைப்பாட்டைப் பார்க்கிறோம். இதற்கு அடுத்தபடியாக சமய ஒருமைப்பாடு. அந்த சமய ஒருமைப்பாட்டையும் நாம் அப்பரடிகளிடத்துக் காணலாம். "ஆறு சமயத்து அவரவரைத் தேற்றும் தகையன - தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே ஏற்றும் தகையன" என்றார். விரிவிலார் வேறொரு சமயம் சொன்னாரேனும் அதுவும் எம்பிரானுக்குப் பொருந்தும் என்று கூறுகிற அளவிற்கு சமய ஒருமைப்பாடு இருந்தது. அப்பரடிகள் கூறிய மொழி ஒருமைப்பாடு, உலக ஒருமைப்பாடு, சமய ஒருமைப்பாடு மூன்றும் உலகில் நிலவுமானால் சண்டை ஏது? சச்சரவு ஏது? அமைதி தவிர வேறொன்றும் இருக்க முடியாது. அப்பரடிகள் கூறுவது போல 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' இவ்வளவு சிறந்த ஒருமைப்பாட்டை ஏழாம் நூற்றாண்டிலேயே அப்பரடிகள் வலியுறுத்தியும் கூட, இந்த இருபதாம் நூற்றாண்டில் கூட ஏன் வளரவில்லை? நம்மிடையே ஒருமைப்பாட்டுக் குறை எப்படி வந்தது? ஆழ்ந்து சிந்தித்தால் இதற்குக் காரணம், நம்முடைய பக்தி இயக்கம் உணர்ச்சியைத் தொடுவதாக மாறினால் சிறந்த ஒருமைப்பாடு விரைவில் மலர்ந்துவிடும் என்பதில் ஐயமில்லை.

இதற்கு அடுத்தபடியாக, எங்கே இறைவன் இருக்கிறான்? அவனை எங்கே போய்த் தேடுவது என்ற கேள்வியைக் கேட்டுக் கொண்டு அப்பரடிகள் பேசுகின்றார். அழகான ஓர் உவமை வாயிலாக இதனை அப்பரடிகள் விளக்குகின்றார்.

விறகுக் கடையிலே விறகைப் பார்க்கிறோம், அந்த விறகில் நெருப்புத் தெரிகிறதா? நெருப்புத் தெரியவில்லை. அதனாலேயே, அதில் நெருப்பு இல்லை என்று கூறிவிட முடியுமா? விறகிற்குள் நெருப்பை உண்டாக்கும் சக்தி இருக்கிறது. பாலில் நெய் தெரிகிறதா? தெரியவில்லையே. அதனாலேயே பாலில் நெய் இல்லை என்று கூறிவிட முடியுமா? விறகில் தீ மறைந்திருப்பது போல, பாலில் நெய் மறைந்திருப்பது போல மாமணிச் சோதியனான இறைவன் எங்கும் மறைந்திருக்கிறான். விறகை எரித்துத் தீயைக் காண்பது போல - பாலைக் காய்ச்சிக் கடைந்து வெண்ணெயெடுத்து நெய்யைக் காண்பது போல, உணர்வென்னும் உறவுக் கயிற்றினால் முறுக வாங்கிக் கடைந்தால் இறைவனைக் காணமுடியும் என்கிறார் அப்பரடிகள்.

"விறகில் தீயினன்
பாலில்படு நெய்போல்
மறைய நின்றுளன்
மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு
உணர்வுக் கயிற்றினால்
முறுக வாங்கிக்
கடையமுன் நிற்குமே!"

என்கின்றார். "உறவு கோல் நட்டு" என்கிறார். இப்போது கடவுளை நெடுந் தொலைவிலே வைத்திருக்கிறோம். குருக்கள் கடவுளா? கோயில் கடவுளா? என்ற மயக்கம் பலருக்கு இருக்கிறது. அப்பரடிகள், "உறவு கோல் நட்டு" என்று கூறுகின்றார்.

(8ஆம்பக்கம் பார்க்க)

# கடவுளை உடைமைப் பொருளாகக் கருதுகிற உணர்வு மீண்டும் உண்டாகவேண்டும்

# அ. நெ. திருக்கூட்ட ஆண்டு விழா

திருச்சிராப்பள்ளி அருள்நெறித் திருக்கூட்டத்தின் ஒன்பதாவது ஆண்டு நிறைவு விழா 14-3-64 காலை மலைக்கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில் சிரவணபுரம் கௌமாரமடத்துத் தலைவர் சந்தரம் அடிகள் தலைமையில் நடைபெற்றது. குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் திரு. ஆவுடையப்ப தேசிகர் திருமுறை ஓதினார். திரு. ஜி. முருகேசன் செட்டியார் அனைவரையும் வரவேற்றார், திரு. சொ. கிருஷ்ணன் ஆண்டறிக்கை படித்தார். திரு. ஆர். ஜெயதேவன் செட்டியார் தவத்திரு அடிகளார் அவர்களுக்கும் விழாவிற் பங்கு பெற்ற ஏனையோர்க்கும் மாலையணிவித்தார். பின்னர் மாணிக்கவாசகர் வழிபாடு நடைபெற்றது. அருள்நெறித் திருக்கூட்டத்திற்கு நன்கொடையாக வழங்கிய திருக்குறள் வேள் ஜி. வரதராஜன் பிள்ளை அவர்கள் மனமுவந்து மாணிக்கவாசகர் திருவுருவத்தை தவத்திரு அடிகளார் அவர்கள் எழுந்தருளச் செய்தார்கள்.

பிறகு. தவத்திரு அடிகளார் அவர்கள் பேசுகையில், "வாழும் மனித சமுதாயத்தைக் கீழ் மட்டத்திலிருந்து மேல் மட்டத்திற்குத் தூக்கிச் செல்லும் சிறந்த ஆற்றல் மிக்க பாடல்கள் திருவாசகப் பாடல்கள்—அவை நாட்டையும் வீட்டையும் அகத்தையும் புறத்தையும் தூய்மைப் படுத்திச் செழுமைப் படுத்தும் சக்தி வாய்ந்தன" என்றார்கள். தவத்திரு அடிகளார் அவர்கள் மேலும் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

"தமிழன் என்றிருப்பானால் அவன் நாள்தோறும் திருவாசகம் ஓதி மகிழவேண்டும்-ஞான அனுபவம் பெறவேண்டும் என்ற நமது பழங்காலச் சமுதாயப் பழக்க வழக்கத்தை மீண்டும் நடைமுறைக்குக் கொணரும் விருப்பத்தோடுதான் நாம் திருவாசக விழா போன்ற விழாக்களை நடத்துகின்றோம். மாணிக்கவாசகரின் புறத்தோற்றத்தை—புறக்கோலத்தை மட்டும் காண்பதோடு நின்றுவிடாமல் அவரது அகத்தோற்றத்தை—ஆன்மநேயத்தை-உள்ளீட்டை நாம் காணவேண்டும். இறைவனை நேரடியாகப் பார்த்து—வழிபட்டற்கான ஆற்றல் நமக்கு இன்னும் கைகூடாத போனாலும்-இறைவனின் தண்ணருட் சாரலில் முங்கிக் குளித்த மணிவாசகப் பெருமானே! தாங்கள் பெற்ற அனுபவத்தை-பேரின்ப அமுதை எங்களுக்கும் பெற்றுக் கொடுங்கள்' என்று மணிவாசகரின் திருவடிகளை வணங்கி நாம் கேட்போமாக! என்றார்கள்.

தவத்திரு அடிகளார் அவர்கள் சைவத் திருமடங்களின் கூட்டமைப்பை வலியுறுத்திப் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

"மற்ற மதங்களும் இயக்கங்களும் பெற்றுள்ளது போல நமது சமயமும், இயக்கமும் இணைந்து ஒருமைப்பாட்டுணர்வோடு—ஊக்கமோடு வளர வேண்டும். மக்கட்கும் சைவத் திருமடங்கட்கும் தொடர்பு ஏற்பட வேண்டும்.

நமது சைவத் திருமடங்களும் திருக்கோயில்களும் ஆன்மாக்களின் பெட்டகமாகத் திகழ வேண்டும் நமது திருமடங்களின் தலைவர்களுக்குள் ஒரு கூட்டு முயற்சி வேண்டும். அப்போதுதான் நமது மதமும், இயக்கமும் தலைசிறந்து நிற்க முடியும்" என்று கூறினார்கள்.

அடுத்து, தவத்திரு சுந்தரம் அடிகள் அவர்கள் தமது தலைமையுரையில் தவத்திரு அடிகளார் அவர்களின் கருத்தைத் தொட்டுப் பேசுகையில், திருமடங்களில் ஒற்றுமையாக-ஒன்றுபட்டுப் பணிபுரியும் நிலைமை அருகிப் போயிருக்கிறது - எல்லாருக்கும் ஒரு கூட்டுப்பொது அமைப்பு இருக்கிறது. அது போல நமது சமயத் திருமடங்களுக்குள்ளும் ஒரு பொது அமைப்பு இருந்தால் மிக நன்றாக இருக்கும்-ஒற்றுமை வளர வேண்டிய இடத்தில் வளரவில்லை. இணைந்துவர விருப்பமுள்ள சைவத்திருமடங்கள் இணைத்துச் செயல்படத் தொடங்கி விட்டால்—விலகி நிற்கின்ற, இயக்கமின்றி நிற்கின்ற சில மடங்களும் வந்து இணைந்துவிடும்' என்றார்கள்.

பின்னர் தேவாரத்தில் புராணம் என்ற தலைப்பில் உரையாற்றிய கூளம் பட்டி மாணிக்கவாசக மடாலய இளவரசு ஸ்ரீ நா.சரவணமாணிக்கவாசக சுவாமிகள் அவர்களும் திருமடங்களின் கூட்டமைப்பை வலியுறுத்திப் பேசினார்கள்.

'திருமுறைகளில் சாத்திரம்' என்பதுபற்றி தருமபுரம் புலவர் திரு. சி. கருணை வடிவேல் முதலியாரும், 'திருமுறைகளில் தோத்திரம்' என்பது பற்றி மன்னார்குடி புலவர்' திரு. தி. சி. இராமச்சந்திர

னும் சிறந்த சொற்பொழிவாற்றினார்கள்.

பின்னர் தவத்திரு அடிகளார் அவர்கள் சிறப்புரையாற்றினார்கள். அச் சிறப்புரையில் அவர்கள் குறிப்பிட்டதாவது:

இரண்டு வகைகளில் குற்றங்களை எடுத்துக் காட்டலாம் குற்றம் உடையவனோடு ஒன்றி உடனிருந்து, அவன் அறியுமாறு உணருமாறு குற்றத்தை எடுத்துக்காட்டுவது ஒருவகை. குற்றம் உடையவனிடமிருந்து விலகி நின்று நேரடியாகக் குற்றத்தை எடுத்துக் காட்டுவது இன்னொருவகை. இந்த இரண்டாவது வகையினால் பலருக்கு வெகுளியே ஏற்படும். நமது மாணிக்க வாசகர் முதல்வகையைச் சேர்ந்தவர். அவர் நம்மோடு ஒன்றி நின்று, அமைதியான முறையில் குற்றங்களை உணர்த்தி நம்மைத் திருத்த முயற்சிக்கிறார்.

'நன்றே செய்வாய் பிழை செய்வாய்-நானோ இதற்கு நாயகமே!' என்று மாணிக்க வாசகர் கேட்கிறார். 'நன்னுடையான்–தீயதிலான்' என்று பாராட்டப்பெறுகிற இறைவன் பிழை செய்வானா? ஒருகாலும் செய்யமாட்டான். எனினும் இறைவன் செய்கின்ற நன்மைகள் நம் அறிவுக்குப் புலனாகாததால், அந்த அளவிற்கு நாம் பக்குவம் அடையாததால் இறைவன் செய்யும் நன்மையும் சில நேரங்களில் பிழை போல—தீயது போலத் தோன்றும். இப்படி நமக்கு முரண்பாடு தோன்றுமானால், நாம் திருமுறையையே பார்த்துத் தெளிவுபெற வேண்டும். திருமுறையே நமது வாழ்க்கை வழிகாட்டியாக வேண்டும்.

இன்னோரிடத்தில்மாணிக்க வாசகர் என்னை யாரறிவார்?' என்று கேட்கின்றார். ஆம். நம்மை நம்முடைய நோக்கத்தை-நமது இயல்புகளை மற்றவர்கள் அறிந்து கொண்டார்களானால், அவ்வாறு அறிந்து கொண்டவர்கள் நமக்கு-நம் செயல்களுக்குக்

(9ஆம் பக்கம் பார்க்க)

# தாய்மொழிச் சிந்தனைதான் உணர்வைப் பெருக்கும்

(5ஆம் பக்கத் தொடர்ச்சி)

அப்பன்நீ அம்மைநீ
ஐயனும்நீ அன்புடைய
மாமனும் மாமியும்நீ

ஒப்புடைய மாதரும்
ஒண் பொருளும்நீ
ஒருகுலமும் சுற்றமும்
ஓரூரும் நீ

துய்ப்பனவும் உய்ப்பனவும்
தோற்று வாய்நீ

துணையாய் என்நெஞ்சம்
துறப்பிப்பாய்நீ

இப்பொன்நீ இம்மணிநீ
இம்முத்துநீ இறைவன்நீ
ஏறூர்ந்த செல்வன்நீயே

இப்பாடலின் வாயிலாக அன்பின் படிவ வளர்ச்சியை அப்பரடிகள் நமக்கு உணர்த்துகின்றார். அப்பாவிடத்திலே இருக்கிற அன்பைவிட அம்மாவிடத்திலே அன்பு கொஞ்சம் அதிகம்தான். அதன் பிறகு மாமனார் மாமியார் உறவு வருகிறது. 'அன்புடைய மாமனும் மாமியும் நீ'. என்று பேசுகின்றார். அன்பின் பரிணாம வளர்ச்சியை அப்பரடிகள் மிக நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறார்.

இந்தப் பரிணாம வளர்ச்சியைக் குறிப்பிட்டுப் பாடிய அப்பரடிகள் இறைவனையே உறவாகப் பார்க்கிறார், கடவுளைக் கடவுளாகப் பார்த்து, ஆடிக்கொருதரம் கும்பிடுவதால் பயனில்லை, கடவுள் உறவு இருக்கவேண்டும் - உடைமைப் பொருளாக இருக்க வேண்டும். இப்படிக் கருதுதற்குரிய உணர்வு நமது சொந்த சிந்தனையில் ஊறிவரவேண்டும். பிற்காலத்தில் கடவுள் பக்தி அப்படி ஊற்றெடுக்கும் அளவிற்கு இல்லாமற் போயிற்று. அதற்கான உணர்வு வற்றிப் போய்விட்டது. கோயிலுக்குப் போனால், குருக்கள் கையில் இருக்கிற மணி ஒலிக்கிறது. பக்தர்கள் மனத்திலே நெகிழ்ச்சியில்லை-சுய சிந்தனை ஓட்டம் இல்லை. இதற்காகத்தான் தமிழில் வழிபாடு நடத்த வேண்டும் என்று நாம் வலியுறுத்தினோம். தாய்மொழிச் சிந்தனையிலிருந்து மனிதனைப் பிரிப்பதுபோல, உலகில் வாழும் மற்றவர்களோடு நாம் பழக வேறு மொழிகளைக் கற்க வேண்டும். ஆனாலும், தாய்மொழிச் சிந்தனையிலிருந்து விலகக்கூடாது. தாய்மொழிச் சிந்தனைதான் உணர்வைப் பெருக்கும் - உணர்வைச் சுரக்கும்! இதனால்தான் நாம் தாய்மொழியில் வழிபாடு வேண்டும் என்று வலியுறுத்தினோம். இதுதவிர, நமக்குப் பிற மொழிகளிடத்து வெறுப்போ காழ்ப்போ துளியும் இல்லை,

(அடுத்த இதழில் முடியும்)

(7ஆம் பக்கத் தொடர்ச்சி)

குறுக்கே நின்று தொல்லை கொடுக்காமல் உடனின்று உதவுவார்கள்ஒத்துழைப்பார்கள் என்ற சிறந்த சமுதாயக் கருத்தை உள்ளத்தில் நிறுத்திக் கொண்டே மாணிக்கவாசகர்' என்னை யாரறிவார்?' என்று கேட்கின்றார். இப்படிப் பேசுகிற மாணிக்க வாசகர்தான், 'என்னுடையாய் கண்டு கொண்டேன் என்றும் குறிப்பிடுகின்றார். இவ்வாறு தன்னையும் தன் தலைவனையும் அறிவதற்கு — உணர்வதற்கு உதவும் ஓர் உயர்ந்த ஒப்பற்ற சாதனம் திருவாசகம்.

திரு.மா. சொக்கையா நன்றி கூறினார். இத்துடன் காலை நிகழ்ச்சி நிறை வெய்தியது.

பிற்பகல், அனைந்திந்திய தமிழ் எழுத்தாளர் பெருமன்றத்தின் செயலர் திரு. அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமையில், 'இறைவழி பாட்டிற்குரிய எண்மலர்கள்' என்ற தலைப்பில் கவியரங்கம் நடைபெற்றது. பேரூர் ஸ்ரீ சாந்தலிங்க அடிகள் தமிழ்க் கல்லூரி முதல்வர் தவத்திரு இராமசாமி அடிகளார் அவர்கள் கவியரங்கத்தைத் தொடங்கிவைத்துத் தமது தொடக்க உரைக் கவிதையைப் பாடினார்கள். தலைவரின் முன்னுரைக்குப்பின் கவிஞர்கள், அ. சம்பந்த மூர்த்தி சி. அரசப்பனார், என். ராகவன், துறைவன், கதிசுந்தரம், வி. துரைசாமி, மயிலை தமிழ்ச் செழியன், சக்திசரணன் ஆகியோர் முறையே, அறிவு, அன்பு, புலனடக்கம், பொறை, கொல்லாமை, வாய்மை, தவம், அருள் என்ற எட்டுத் தலைப்புக்களில் தாம் பாடிய கவிதைகளை'அரங்கேற்றினார்கள்- (கவிதைகள் தமிழகத்தில் தொடர்ந்து வெளிவரும்)

(பின்னர், தவத்திரு அடிகளார் அவர்கள், அரங்கேறிய கவிஞர்களைப் பாராட்டி வாழ்த்திவிட்டு, திருச்சிப் பகுதியில் நல்லமுறையில் திருமுறை அருச்சனையைச் செய்துவைக்கின்ற சிவாசாரியாருக்குப் பட்டுப் போர்த்திச் சிறப்பித்தார்கள். தவத்திரு அடிகளார் அவர்கள் தொடர்ந்து பேசுகையில் குறிப்பிட்டதாவது:

மருத்துவர்கள் தங்கள் மருத்துவத்தால் எத்தனை நோயாளிகளைக் காப்பாற்றியிருக்கிறார்கள் என்பதைப் பொறுத்துத்தான் மருத்துவர்களுக்குச் சிறப்பு. கவிஞர்களும் எழுத்தாளர்களும் தங்கள் எழுத்துக்களால் எத்தனை பேரைத் தட்டி எழுப்பிச் சமுதாயத்திற்கு சமுதாய உணர்வுக்குத் தயார்ப்படுத்தியிருக்கிறார்கள் என்பதைப் பொறுத்துத்தான் கவிஞர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் சிறப்பு. அதுபோல, சமுதாயத்தில் எத்தனைபேருடைய ஆன்ம உணர்வைத் தூண்டிவிட்டுப் போற்றிக் காத்து வளர்த்திருக்கிறார்கள் என்பதைப் பொறுத்துத்தான் சிவாசாரியார்களுக்குச் சிறப்பு என்றார்கள்.

பின்னர், தவத்திரு அடிகளார் அவர்கள் திருவாசக ஊர்வலத்தைத் தொடங்கி வைத்தார்கள். திருவாவடுதுறைத் தமிழ் மறை இன்னிசைப் பண்மணி திரு விசுவலிங்கம் சபாபதி குழுவினரின் தேவார இசையோடும், திருக்கோளக்குடி நாதசுர வித்துவான் திரு. சுப்பிரமணியன் குழுவினரின் நாதசுரக் கச்சேரியோடும் திருவாசக ஊர்வலம் சிறப்பாக நடந்து நிறைவெய்தியது.



# செய்திகள்

## திருச்செங்கோடு அர்த்த நாரீஸ்வரர் கோடி அருச்சனை

திருச்செங்கோடு ஸ்ரீ அர்த்த நாரீஸ்வரர் கோடி அருச்சனையை முன்னிட்டு 6-3-64 மாலை திருமலையின் மீது ஒரு சிறப்புக் கூட்டம் ஏற்பாடு செய்யப்பெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் ''மாதொருபாகன் பெருமை'' என்பது பற்றி அரியதொரு சொற்பொழிவாற்றினார்கள். கோயில் தலைமைதருமகர்த்தா திரு. டி. எம். காளியண்ணன் எம். ஏ., பி. காம். எம். எல். ஏ. அனைவரையும் வரவேற்றார்.

இக்கூட்டத்தை யொட்டி மாதொரு பாகனுக்கு விசேட அபிடேக ஆராதனைகள் நடைபெற்றன. தவத்திரு அடிகளார் அவர்கள் வழிபாட்டில் கலந்து கொண்டார்கள்.

## ஈரோடு கைத்தறி வார விழா

ஈரோடு 10-வது அகில இந்திய கைத்தறி வாரவிழா ஈரோடு பழைய மருத்துவமனை மைதானத்தில் 1-3-64 முதல் 8-3-64ந் தேதி ஈரோடு அருள்நெறித் திருப்பணி மன்ற நிருவாகி திரு. எம். கணபதி முதலியார் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் பேசுகையில், இந்த நாட்டின் பழம் பெருந்தொழில்கள் விவசாயமும் நெசவுமே என்றும் நமது கைத்தறித் துணிகளுக்கு மிகப்பழங்காலத்திலேயே அயல் கிராக்கி இருந்திருக்கிறதென்றும் கூறினார்கள். கைத்தறியாளர்கள் இன்றையத் துயர்களையும் வகையினையும் அவர்கள் விளக்கினார்கள்.

இரவு சிவா கலை மன்றத்தாரின் 'அணையா விளக்கு' நாடகம் சிறப்பாக நடைபெற்றது.

## சேலம் கைத்தறி வார விழா

சேலம் 10-வது அகில இந்திய கைத்தறி வாரவிழா சேலம் அருணாசலம் ஆசாரி வீதியிலிருக்கும் நகராண்மைக் கழக ஆரம்பப் பள்ளித் திடலில் நடைபெற்றது. 7-ஆம் நாள் விழா 7-3-64ல் சேலம் மாவட்ட கல்வி அதிகாரி திரு. சி. பத்மநாபன் பி. ஏ., எல். டி. தலைமையில் நடைபெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் கூட்டுறவும் கைத்தறியும் என்பது பற்றி அரியதோர் உரையாற்றினார்கள்.

இரவு ஸ்ரீ இராமலிங்க சாமிகள் விழாவில் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றினார்கள்.

## சென்னை பிரகாஷ் கலைமன்ற ஆண்டு விழா

சென்னை பிரகாஷ் கலைமன்றத்தின் 2-வது ஆண்டுவிழா 8-3-64ல் சேப்பாக்கம் பாலர் அரங்கில் நடைபெற்றது இதை யொட்டி ஏற்பாடு செய்யப் பெற்றிருந்த கருத்தரங்கை தமிழக சுகாதார அமைச்சர் திருமதி ஜோதி வெங்கடாசலம் அவர்கள் துவக்கிவைத்தார்கள். தவத்திரு அடிகளார் அவர்கள் கருத்தரங்கிற்குத் தலைமை வகித்தார்கள்.

திருவாளர்கள் ஈ. வெ. கி. சம்பத், கவிஞர் கண்ணதாசன் கே. பாலதண்டாயுதம், எஸ் என். ஏ. அஜீஸ், ஜயகாந்தன், ஏ. ஜி. மோகன் எம். சி. ஆகியோர் கருத்தரங்கில் கலந்து கொண்டார்கள்.

தொடக்கத்தில் மன்றத் தலைவர் திரு. எம். சுப்பிரமணியம் அனைவரையும் வரவேற்றார். மன்றக் காப்பாளர் விழாவையொட்டித் தயாரிக்கப் பெற்ற சிறப்பு மலரை வெளியிட்டார். மன்றச் செயலர் திரு. கே. வி. இராமச்சந்திரன் நன்றி கூறினார்.

## திண்டிவனம் கூட்டுறவு மேற்பார்வைக் கழகக் கட்டிடம் திறப்புவிழா

திண்டிவனம், கூட்டுறவு மேற்பார்வைக் கழக கட்டிடத் திறப்புவிழா 8—3—64ல் தமிழகக் கூட்டுறவு ராஜ்ய பாங்க்தலைவர் திரு. ஆர். கனகசபைப் பிள்ளை எம். பி. தலைமையில் நடைபெற்றது. மாநில கூட்டுறவுப் பதிவாளர் திரு. வி. கே. அப்பாண்டராஜன் பி. ஏ. (ஹானர்ஸ்) கட்டிடத்தைத் திறந்து வைத்தார். தவத்திரு அடிகளார் அவர்கள், மக்கள் கூட்டுறவினால் பெறத் தக்க பயன்களையும், அதனை வளர்க்கவேண்டியதின் இன்றியமையாமையையும், விளக்

கின்றார்கள். திரு. கே. எஸ். வெங்கட கிருஷ்ணரெட்டியார் அனைவரையும் வரவேற்றார். திரு. டி. ஏ. ராமலிங்க நாயுடு நன்றி கூறினர்.

## குஞ்சிதபாதம் மாணவர் இல்லம் ஆண்டு விழா

வடசேரி குஞ்சிதபாதம் மாணவர் இல்லத்தின் இரண்டாவது ஆண்டுவிழா 10-3-64ல் திரு. ஆர். எஸ். மலையப்பன் ஐ.ஏ. எஸ். தலைமையில் நடைபெற்றது. திரு. கே. இராமநாதன், திரு. கே. சுவாமிநாதன் ஆகியோர் பேசியபின் தவத்திரு அடிகளார் அவர்கள் சிறந்ததொரு சொற்பொழிவாற்றினார்கள். செயலர் திரு. க. சி. தமிழ்மணி நன்றி கூறினர்.

## இலக்கிய மன்ற ஆண்டு விழா

திருமங்கலக் கோட்டை இளையூர் கழக உயர்நிலைப் பள்ளி இலக்கியமன்ற ஆண்டு விழா 10-3-64ல் திரு. ரா. கண்ணுச்சாமிவாண்டையார் தலைமையில் நடைபெற்றது. உயர்நிலைப் பள்ளிக் குழுச் செயலர் திரு. ப. பிச்சைதென்கொண்டார் தேசியக்கொடியேற்றினார். தவத்திரு அடிகளார் அவர்கள் அனைவரும் அன்பால் இணைந்து ஒரு குலமாக வாழவேண்டியதின் இன்றியமையாமையை விளக்கி அரியதொரு சிறப்புரையாற்றினார்கள்.

## திருச்சியில் திருவாசக விழா

திருச்சிராப்பள்ளி அருள் நெறித் திருக்கூட்டத்தின் பத்தாவது திருவாசக விழா திருச்சி தேவர் மன்றத்தில் 15-3-64ல் திரு. ஆர். ஜெயதேவன் செட்டியார் தலைமையில் தொடங்கியது. திரு. விசுவலிங்கம் சபாபதி குழுவினரின் திருமுறை ஓதலோடு விழா தொடங்கியது. திரு. சொ. கிருஷ்ணன் அனைவரையும் வரவேற்றார். திருவாசகத்தில் "சமூக இயல்" என்பது பற்றி தவத்திரு இராமசாமி அடிகளும், "திருவாசகத்தில் அருளியல்" என்பது பற்றி பேராசிரியர் திரு. அ. சங்கரநாராயணனும், திருவாசகத்தில் அறிவியல் என்பது பற்றி திருக்கோயில் ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேளும் சிறந்த சொற்பொழிவாற்றினார்கள். தவத்திரு அடிகளார் அவர்களின் ஆசியுரை மிகச் சிறந்ததோர் ஆய்வுரையாகவே அமைந்திருந்தது. திரு. சொ. கிருஷ்ணன் நன்றி கூறினர்.

பிற்பகல், திருமுறைஓதலுக்குப்பிறகு தவத்திரு அடிகளார் அவர்களின் தலைமையில் 'அருளியலும் அறிவியலும் தம்முள் ஒன்று பட்டவையா? மாறுபட்டவையா?' என்ற தலைப்பில் பட்டிமன்றம் நடைபெற்றது. "ஒன்றுபட்டவையே" என்ற கட்சிக்கு திரு பாலுச்சாமி தலைமை வகித்தார். அவர் கட்சியில் திரு. குமரி அனந்தன், திரு. அ. சங்கரநாராயணன் ஆகியோர் விவாதித்தனர். "மாறுபட்டவையே" என்ற கட்சிக்கு புலவர் திரு. கீரன் தலைமை வகித்தார். அவர் கட்சியில், குமாரி சிவகாமசுந்தரி, பேராசிரியர் சி. எஸ். கமலபதி ஆகியோர் விவாதித்தனர்.

தவத்திரு அடிகளார் அவர்கள் தமது முடிப்புரையில், அருளியலும் அறிவியலும் தம்முள் ஒன்று பட்டவையே என்றும், பொதுவாக இரண்டுமே மனித உலகத்தை வாழ்விப்பன, என்றும், இரண்டுக்கும் நோக்கமும் செய்முறையும் ஒன்றே என்றும் கூறினார்கள். இறுதியாக, சுருதிக்கும் தாளத்திற்கும் மாறுபடாமல் அருளியல் வாதிகளும் அறிவியல் வாதிகளும் ஊதினால்—செயல்பட்டால் உலகம் தலை சிறந்து வாழும் என்கிறார்கள். (தவத்திரு அடிகளார் அவர்களின் விரிவான பேச்சு பின்னர் வரும்)

திரு. சா. பெரியசாமி நன்றி கூறினர். திரு. விசுவலிங்கம் சபாபதி குழுவினரின் தமிழ் மன்ற இன்னிசை நடைபெற்றது. விழாவில், திரு. சொ. கிருஷ்ணன் நன்றி கூறினர்.

### பொறுத்துக்கொள்க

தவத்திரு அடிகளார் அவர்கள் தொடர்ந்து சுற்றுப்பயணத்தில் இருப்பதால் இவ்வாரம் 'தலையங்கமும்' 'குறட் செல்வமும்' வெளியாகவில்லை, அன்பர்கள் பொறுத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேம்.

—துணை ஆசிரியர்

Registered No. M. 7827 THAMILAGAM - Weekly 30-3-64



## அடிகளார் அருளிய நூல்கள்

| | |
|---|---|
| கொடியா கொம்பா? (மூன்றும் பதிப்பு) | 0-30 |
| திருவாசகத் தேன் | 0-25 |
| குறள் வாழ்வு | 0-50 |
| ஈழத்தில் அருள்நெறித் தந்தை<br>தொகுத்தவர் ஈழத்துச் சிவானந்தம் | 0-75 |

அருள்நெறிப் பண்ணை, குன்றக்குடி
(இராமநாதபுரம் மாவட்டம்)

## அடிகளார் சுற்றுப்பயணம்

ஏப்ரல், 1964

1 கல்லல்
2 மணமேற்பட்டி
சண்முகநாதபுரம்
3 தனக்கர்குளம்
கால்கரை
க. புதூர்
நாங்குநேரி
5 பாண்டுகுடி
6 சேவினிப்பட்டி
T. சுக்காம்பட்டி

வெளியிடுவோர், ஆசிரியர்: ஆறு. சுப்பிரமணியன், அடிகளார் அச்சகம், குன்றக்குடி இராமநாதபுரம் மாவட்டம். துணை ஆசிரியர்: சாமி பழனியப்பன்.